ரங்கநாயகருக்கு அநேக பூமி விட்டு கோவில்கள் பழுதுபார்த்து தருமங்கள் முன்னாலே ராயர் நாளிலே நடந்தபடி நடப்பித்து இராச ராசாவென்று கீர்த்தியை அடைந்திருந்தான். அப்போது சகை 1512 கரவருஷத்திலே பெனுகொண்டையிலே யிருந்த ஸ்ரீ ரங்கராயன் ஸ்வர்க்கத்தை அடைந்தபிறகு அவன் மகன் வெங்கிடபதி ராயனுக்கு பெனுகொண்டையிலே பட்டாபிஷேகமாய் அந்த ராச்சியம் அவன் இரக்ஷித்தான். ஸ்ரீ ரங்கராயன் தம்பி வெங்கடபதி ராயன் சந்திரகிரியிலே இரக்ஷித்துக்கொண்டிருந்தான். இப்படி இருக்கச்சே மதுரை வீரப்ப நாயகன் தன்னுடைய சகல பலத்துடனே ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு வருகிறானென்ற சமாசாரம் திருமலை ராயன் கேட்டு தன்னுடைய தளவாய் வெங்கிடபதியையனுடனேகூட சகல பலமும் அழைத்துக்கொண்டு எதிரே பழனிக்குச் சமீசத்திலே யிறங்கி அவர்களுடனே வெகுயுத்தம்பண்ணி செயித்து மதுரையான் அபசெயத்துடனே பின்னடைந்து போனதினாலே தளவாய் வெங்கிடபதியையன் இராசாவையும் அழைத்துக்கொண்டு தொடர்ந்துபோய் மதுரை சீமையெல்லாம் கொள்ளைபண்ணினவிடத்திலே மதுரைவீரப்ப நாயகன் வெங்கிடபதிராயனுக்கு அநேக திரவியங் கொடுத்தான். அதனாலே சந்தோஷப்பட்டு வெங்கிடபதிராயன் வஞ்சனை உபாயத்தினாலே திருமலைராயனை அவர்கள் கையிலே சிக்கப்பண்ணி தான் சகல பலத்துடனேகூட ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு வந்து இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டிருந்தான். அதன்பிறகு திருமலைராயன் அவர்களிடத்திலே நின்றும் விடுதலைசெய்துகொண்டு ஸ்ரீரங்கபட்டணத்துக்கு வந்தவிடத்திலே வெங்கிடையன் அவனைப் பட்டணத்திலே வரவிடாமல் துரத்திவிட்டான். அப்போது திருமலைராயன் மாலிங்கைகேசரை என்கிற கிராமத்திலே போயிருந்தான். அப்போது சமஸ்த பாளையக்காரர்கள் வெங்கிடபதியையன் பேச்சைக் கேட்டுக்கொண்டு திருமலைராயன் ஆகாதென்று தங்களுடைய பலத்துடனேகூட கேசரையென்கிற கிராமத்திலே வந்து முத்திகைபோட்டவிடத்திலே மைசூர் ராசா தன்னுடைய பலத்துடனே கேசரைக்கு வந்து அந்தப் பாளையக்காரருடனே யுத்தம்பண்ணி அவர்களை முறியடித்து அங்கேயிருந்தபடியினாலே ஸ்ரீரங்கபட்டணத்துக்கு வந்து வெங்கிடபதியையன் கொஞ்ச பலத்துடனேயிருந்த கோட்டையில் வஞ்சனையாய் உபாயத்தினாலே சிறிது சனங்கள் உள்ளே வந்து, அதுக்குமேல் [1]ராசா உடையரும் உள்ளே வந்து கோட்டை கைவசம்பண்ணிக்கொண்டார். சகை வருஷம் 1531 சௌமிய வருஷம் மைசூர் இராசாக்கள் வம்சத்தில் ராச உடையார் வம்சமாச்சுது.

---

[1] ராச உடையார்-முதல் மைசூர் வம்ச அரசன்.